[9th November 1965

**திரு. கே. எஸ். அப்துல் வகாப் :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இரண்டாவது உபமான்ய கோரிக்கை கொடுக்கும்பொழுது, தேசிய பாதுகாப்பு சம்பந்தப்பட்ட பல செலவினங்கள் இதிலே சேர்க்கப்பட்டிருக்கின்றன. நேஷனல் எமர்ஜென்ஸி என்ற அடிப்படையில், சிவில் டிபென்ஸ் என்ற செலவிற்கு பல ஆயிரம் ரூபாய், டாக்டர்களை இராணுவத்திற்கனுப்புவதற்கு 20 ஆயிரம் ரூபாய் போன்ற பல இனங்கள் தேசப்பாதுகாப்பிற்காக ஒதுக்கப்பட்டிருக்கின்றன. அந்த நிலைமையில், பாகிஸ்தான் ஆக்கிரமிப்பைக்குறித்து, அதைக்கண்டித்து சில வார்த்தைகள் சொல்லுவது பொருத்தமாக இருக்காதென்று நான் நினைக்கவில்லை. நேற்று, பாகிஸ்தான் ஆக்கிரமிப்பைக்கண்டித்து இந்த சபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் மீது நானும் சில வார்த்தைகள் பேச விரும்பினேன். கனம் மதிப்பிற்குரிய தொழில் அமைச்சரவர்கள் மூன்று பேர் மட்டும் பேசவேண்டும்; நீங்கள் வேறொரு சமயத்தில் உங்கள் கருத்துக்களை சொல்லலாம், என்று யோசனை சொன்னார்கள். நானும் அதை ஏற்றுக்கொண்டு, இன்று பேசும்பொழுது என் கருத்துக்களை சில வார்த்தைகளில் சொல்லி அதை முடிக்கலாமென்று நினைக்கிறேன்.

பாகிஸ்தான் இந்த யுத்தத்தை துவக்கியது. அவர்கள் தான் அதற்குக்காரணம் என்பதில் இரண்டு கருத்துக்கள் யாருக்குமே இருக்க முடியாது. இந்த யுத்த துவக்கத்திற்கு முன்பு, ஆரம்பத்தில் ஊடுருவல்காரர்களை அனுப்பியவர்கள் பாகிஸ்தான் தான். இல்லாவிட்டால், இந்த யுத்தமே துவங்கி இருக்காது. பாகிஸ்தானின் போக்கு பல ஆண்டுகளாகவே மிகவும் கேவலமான, தவறுதலான அடிப்படையில் போய்க்கொண்டிருக்கின்றது. நான் பாகிஸ்தானைக்கண்டித்து இந்த சபையில் பல முறை பேசினேன் என்றால், காரணம் நான் சார்ந்துள்ள முஸ்லீம் லீக் கட்சியின் கொள்கை அத்தகையது. இந்த யுத்த துவக்கத்தை தொடர்ந்து நமது முஸ்லீம் லீக் கட்சி தலைவர் அவர்கள், கண்ணியத்திற்குறிய காயிதேமில்லத் அவர்கள் பார்லிமெண்டிலும், மற்ற இடங்களிலும் பேசிய பொழுது, பாகிஸ்தானை எதிர்த்து முஸ்லீம்கள் பூர்ண ஆதரவு இந்திய அரசாங்கத்திற்குக்கொடுக்க தயாராகவிருக்கிறோம் என்று வாக்குறுதி சொன்னார்கள். அதைத்தொடர்ந்து, முஸ்லிம்களும் பாதுகாப்புப் பணியில் முன்னணியில் நின்று பல சேவைகள் செய்து வருகின்றனர். அவர்களுடைய அந்த கருத்துக்களை, நான் முஸ்லீம் லீக் கட்சியைச்சார்ந்தவன் என்ற அடிப்படையில் இந்த சபையில் ஊர்ஜிதம் செய்ய விரும்புகிறேன். முஸ்லீம்கள் தேச விசுவாசிகளாகத்தான் இருக்க முடியுமே தவிர வேறு விதமாக இருக்க முடியாது. நான் ஏன் அப்படி சொல்லுகிறேனென்றால், முஸ்லீம்கள் வேதம் அவர்களுக்கு அப்படி போதிக்கிறது. வேதத்திலுள்ள ஒரு வாசகம், அரபு மொழியில் நான்கு வார்த்தைகள், நான் சொல்ல விரும்புகிறேன். குருக்கெழுத்தாளர் தமிழ் மொழியில் அதை குறிப்பிட வேண்டுமென்று கோருகிறேன்.

9th November 1965] [திரு. கே. எஸ். அப்துல் வகாப்]

"ஹுப்புல்வதனி மினல் ஈமான்"

இதற்குப் பொருள், தாய் நாட்டிற்கு உண்மையாக, விசுவாசமுள்ளவனாக இருக்கவேண்டும். இது ஈமானின் ஒரு பகுதி. ஈமான் என்பது இறை நம்பிக்கை, இஸ்லாமின் ஆணி வேர் என்று சொல்லுவேன். வேறு வார்த்தையில் சொல்லவேண்டுமென்றால், தாய் நாட்டிற்கு முஸ்லீம்கள் உண்மையான விசுவாசிகளாக இருக்கவேண்டும் என்பது இஸ்லாமின் ஆணி வேரின் ஒரு பகுதி. இது வேதம் முஸ்லீம்களுக்குக்காட்டும் வழி. இந்த நிலைமையில், முஸ்லீம்கள் வேறு வகையாக இருக்க முடியாது. தப்பித் தவறி ஒன்றிரண்டவர்கள் தேச விசுவாசத்தில் களங்கம் காட்டினார்களேயானால் அவர்கள் உண்மையான முஸ்லீம்களாக இருக்க முடியாது. நம்முடைய கட்சியினுடைய கொள்கை தெளிவாக தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. நம் கட்சியை—முஸ்லீம் லீக் கட்சியைச் சேர்ந்த மூன்று உறுப்பினர்கள் பாதுகாப்புச் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுடன் நான் நெருங்கிப் பழகக் கூடியவன்; அவர்களை நன்கு தெரிந்தவன். அவர்கள் தேசத் துரோகிகள் அல்ல. அவர்கள் எந்த தேசத் துரோகமான செயலிலும் ஈடுபடக்கூடியவர்கள் அல்ல என்பதை நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். அவர்கள் செய்த குற்றம் தெரிவிக்கப்படவில்லை. சி.ஐ.டி. ரிப்போர்ட்டுகள் அவர்களுக்குப் பாதகமாக இருப்பதாகச் சொல்லப்படுவதாகக் கேள்விப்பட்டேன். சி.ஐ.டி. ரிப்போர்ட்டுகள் எல்லாம் வேதவாக்காக இருக்க முடியாது; அவர்கள் பாதுகாப்பிலே வைக்கப் பட்டு இருப்பதாலே அரசாங்கத்தின் சார்பிலே ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது என்று தான் நான் உணருகிறேன். அவர்களின் கேஸ் மறு பரிசீலனை செய்யப்படவேண்டும். அவர்கள் உடனடியாக விடுதலை செய்யப்படவேண்டும் என்று மிகப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். அவர்களுக்கு நான் ஜாமீனாக இருக்கத் தயாராக இருக்கிறேன். ஏனென்றால் அவர்கள் குற்றம் இழைக்கக் கூடியவர்கள் இல்லை, என்பதை நான் நிச்சயமாக நன்கு அறிவேன். அவர்களுடைய குற்றம் விசாரிக்கப்படலாம். விசாரிக்கப்படட்டும். அவர்கள் நிச்சயமாக தேசத் துரோகிகள் என்பது நிரூபமானால் அவர்கள் சார்பாக நானும் சிறை செல்லத் தயாராக இருக்கிறேன். வேண்டுமானால் எனக்கு தூக்கு தண்டனை கொடுத்தாலும் நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வேன். நான் ஏன் இப்படி குறிப்பிடுகிறேன் என்றால் அந்த அளவுக்கு அவர்கள் குற்றம் இழைக்கக் கூடியர்களல்ல என்ற உறுதி எனக்கு உண்டு. 4-10 m.

MR. CHAIRMAN : The hon. Member's time is up.

**திரு. கே. எஸ். அப்துல் வகாப்:** தயை கூர்ந்து அவர்கள் கேஸ்களை மறு பரிசீலனை செய்து அவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று மிகப் பணிவாக மறுபடியும் கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* SRI M. RAJAH IYER : Mr. Chairman, Sir, at the outset I should congratulate the Government on the very good bargain they have struck over the Mandapam camp premises. The sum of Rs. 19 lakhs is a very small one compared to the wonderful

place that we are getting. It is a very nice part in the East Ramanathapuram district. It is a pity that there has been a lot of vandalism there. Most of the trees there that went to make it such an exquisite spot have been cut down. (Interruption). It was agreed to just now. We are happy that we have got it for Rs. 19 lakhs. As it is, it is a very god bargain. But we should hasten to occupy the premises and the very many buildings there. A number of offices of the East Ramanathapuram district are even today located in rented buildings. They could all be shifted to the new place. The Government Basic Training School, Ramanathapuram, had to be shifted from Ramanathapuram, because we could not get a building for the Government Basic Training School for men. A more ideal place than Mandapam camp cannot be thought of for locating the training school for men and women. A number of buildings are there. We should hasten to occupy them, lest the vandalism should continue. It is a nice tourist centre. It is a place of attraction for European tourists for it provides the ideal sea bath. The circuit house there is one of the best in our part of the country, and I do hope we will promote tourism and attract tourists to the Mandapam camp and do everything to bring the Mandapam camp to its old glory.

Then, Sir, though every aspect has been coloured by our defence effort to-day, directly or indirectly, I should point out that not much emphasis is being laid and not much importance is being attached to the relief of the jawans' families. My hon. friend said that a lakh of rupees must be considered to be too low. I for one should think that it is not quite charitable to compare our allotment with the allotment of Rajasthan and Punjab, for from the list of casualties we find that ninety per cent of the dead jawans hailed from those States. I am not for a moment suggesting that this sum of Rs. 1 lakh is too small or poor. I hope Sir, that, apart from what we are doing, there must be a concerted effort to see that every family of a deceased jawan is contacted as it is being done by non-official agencies and their legitimate representations are given top priority. People coming from the families of dead jawans must be shown preference and top priority in the matter of appointments. I know of a particular case. It was a pathetic case. I am referring to the widow of a deceased jawan by name Francis of Thimmappatti. Taking to her a sari and rice bags and all that cannot relieve her misery to the extent that the provision of an alternate job for her brother-in-law would. Even now the Employment Exchanges stand on old rules and regulations. I think in this extraordinary situation, the Government officials should beat through all these rules and give preferential treatment to employable persons from the families of the deceased jawans, particularly because this will go a long way to relieve their misery. Thank you very much Sir.

* திரு எம். சுப்பையா செட்டியார்: கனம் தலைவர் அவர்களே, இந்த உபமானியக் கோரிக்கையின் போது சில அபிப்பிராயங்களை எடுத்துச் சொல்ல அனுமதித்த உங்களுக்கு நன்றி தெரிவிக்க

9th November 1965] [திரு. எம். சுப்பையா செட்டியார்]

ஆசைப்படுகிறேன். பாகிஸ்தான் படை எடுப்பு காரணமாக நம் மத்திய அரசாங்கத்திலிருந்து மாநில அரசாங்கத்துக்கு வருவாய் குறைவு ஏற்படும் காரணத்தால் இன்னும் நிதி தேவை என்ற காரணத்தையும் காட்டி கிட்டத்தட்ட 6 கோடி ரூபாய்க்கு உபரி வரியாகப் போட்டிருக்கிறார்கள் என்று நான் உணருகிறேன். ஆனால், இந்த வரி விதிப்பால் ஏற்படும் விளைவுகளை ஆராய்ந்து செய்திருந்தால்—நாம் கண்டிப்பாக அவர்களுக்கு நிதி உதவி செய்ய வேண்டியது மட்டுமல்ல, ஆதரவு காட்ட வேண்டிய நிலையில் தான் இருக்கிறோம்—ஆனால் முன்னரே மக்கள் விலைவாசி உயர்வு கொடுமையால் பாதிக்கப்பட்டு, எத்தனை விலை கொடுத்தாலும் அதற்கு பொருள் கிடைக்காத நிலை இருப்பதால், விலைவாசி ஏறி வரும் இந்தத் தருணத்தில் திரும்ப விலைவாசிகள் ஏறுவதற்குக் காரணமாக இந்த வரி விதிப்புகள் இருக்கின்றன என்பதை அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். அதாவது விற்பனை வரி மூலமாக "லக்ஸரி குட்ஸ்" அயிட்டங்களுக்கு முன்பே 10 சதவிதம் இருப்பதை 11 சதவிதமாகவும் இதர அயிட்டங்களுக்கு அரை சதவிதம் உபரியாக இருப்பதாலே 4-20 p.m.

* * *

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** இதை அந்த 'பில்' வரும் போது பேசலாமே.

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** ஒரு இரண்டு வார்த்தை. டிரான்ஸ்போர்டில்—டீசல், பெட்ரோலுக்கு ஒரு பைசா என்று உயர்த்தி இருக்கிறார்கள். இதைப் பார்க்கும்போது எனக்கு ஒன்று தோன்றுகிறது. 'பள்ளிக் கணக்கு புள்ளிக்கு உதவாது' என்பது போல் ஏதோ வரி போட்டுவிட்டால் வரி தானாக வந்து விடும்—ஆனால் அதனால் பாதிக்கப்படுபவர்கள் யார் என்பதை உணர்ந்து செய்திருந்தால் நாம் அரசாங்கத்தை பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம், முன்பே விலைவாசிகள் உயர்ந்துள்ள இந்த நிலையில் இன்னும் விலைவாசியை உயர்த்தும் வகையில் வரிகளைப் போட்டுக்கொண்டே போனால்—அதிலே என்ன ஆச்சரியமாக இருக்கிறதென்றால், பாகிஸ்தான் சண்டை இந்தியாவுக்குத் தான் வந்திருக்கிறது என்பதை நாம் உணருவோம், மக்கள் பாகிஸ்தானுக்கு பாடம் கற்பித்த நம் வீர ஜவான்கள் சேவையைப் பாராட்டும் நிலையில் இருக்கும் இந்த நேரத்தில் மக்கள் வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி, எதையும் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்—இந்த நிலையில் விலைவாசிகளை மேலும் ஏற்றிக் கொண்டே போனால் அது எங்கு போய் நிற்கும் என்பதை அரசாங்கம் சிந்திக்கவேண்டிய நிலை வரும் என்று அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

சமீபத்தில் "வார் லோன்" என்று வசூல் செய்கிறார்கள். அதை எல்லோரும் மனம் ஒப்பித் தான் கொடுக்கிறார்கள். இருந்தாலும் அதிலே சில "கம்பல்ஷன்" இருப்பதைத் தான் நான் அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்கிறேன். ஒருவரும் அதைக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லவில்லை. ஆனால் "லெவி" என்ற முறையில் ஒரு பஸ்காரரிடம் ஒரு பஸ்ஸுக்கு

[திரு. எம். சுப்பையா செட்டியார்] [9th November 1965

1,000, 2,000 என்றும் ஒரு வியாபாரி ஒரு லட்சம் 'டர்ன்ஓவர்' இருந்தால், 10,000-க்கு இவ்வளவு கொடுக்கவேண்டுமென்று வசூல் செய்கிறார்கள். யாரிடத்தில் கூடுதலாக வசூல் செய்யலாம் என்று சந்தர்ப்பத்தை வைத்துச் செய்தால் . . .

**கனம் திரு. எம் பக்தவத்சலம்** : பாதுகாப்பு நிதி என்று தனியாக வசூல் செய்கிறோம். 'ஸ்மால் சேவிங்ஸ் டிரைவ்" Small Savings Drive என்பது தனியாக வசூலிக்கப்படுகிறது. இதில் கனம் அங்கத்தினர் எதைக் குறிப்பிடுகிறார்?

**திரு. எம். சுப்பையா செட்டியார்** : "ஸ்மால் சேவிங்ஸ் லோன்" என்ற அதைத் தான் நான் குறிப்பிட விரும்புகிறேன். அதை இந்த மாதிரி 'லெவி' முறையாக வைத்து, 'கம்பல்சரி' யாக வைத்தால்—சக்தி உள்ளவர்கள் கொடுக்கலாம். ஆனால் கடன் வாங்கி சிலர் சிரமப்பட்டு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள், எதோ ஒரு நல்ல எண்ணத்தோடு . . .

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : இது கடன். திரும்பி வந்து விடும். அதற்கு வட்டி 8 சதவிகிதம்.

**திரு. எம். சுப்பையா செட்டியார்** : எங்களிடத்தில் 4¾ சதவிகிதம் வட்டி என்று தான் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். எங்களுக்கு கொடுக்கக்கூடியதெல்லாம் நாலேமுக்கால் சதவீத அட்வான்ஸ் லோன் என்று தான் அவர்கள் சொல்கிறார்களே தவிர, 8 சதவிகிதத்துக்கு வாங்கவில்லை. இந்த நிலைமையில் இதை வாங்கவேண்டாம் என்று சொல்லவில்லை. எவ்வளவு கஷ்டப்பட்டாவும் அரசாங்கத்துக்கு பணம் கொடுக்க யாரும் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் கொடுக்கக் கூடியவர்கள், கொடுக்க முடியாதவர்கள் என்ற தாரதம்மியம் பார்த்துச் செய்ய வேண்டும் என்ற கருத்தைத் தான் சொல்கிறேனே தவிர, வேறல்ல அதிகாரிகள் சொல்கிறார்கள் "எங்களுக்கு டார்ஜெட் போட்டுக் கொடுத்திருக்கிறார்கள், வசூல் செய்யாவிட்டால் எங்களுக்கு வேலை போய்விடும் இதை அனுசரித்து எங்களுக்கு உதவி செய்ய வேண்டும்" என்று அவர்கள் கேட்கிறார்கள். பாங்கிகளிலும் இதர இடங்களிலும் பணம் கிடைக்க மாட்டேன் என்கிறது. எட்டு சதவிகிதம், பத்து சதவிகிதம் என்று பாங்கிகள் டெபாசிட் வாங்கும்போது நாலே முக்கால் சதவீதத்துக்குக் கேட்டால் "கம்பல்சரி" யாக வசூலிப்பதைப் பற்றித்தான் சொல்ல ஆசைப்படுகிறேன்—சண்டை வரும்போது சந்தர்ப்பம் வரும்போது கொடுக்கிறோம். இதை அனுசரித்து செய்தால் சௌகரியமாக இருக்கும். அரசாங்கமானது கூடுமானவரை மக்களுக்கு உதவி செய்யத் தான் இருக்கிறது என்பதை உணர்ந்து தேவையான பணத்தை சுமூகமான முறையில் வசூல் செய்தால் நல்லது என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து, அரசாங்கத்தின் செலவானது நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போகிறது. அரசாங்கத்துக்கும் இது தெரியும் எத்தனையோ சிக்கனம் செய்யலாம் என்பதும் அரசாங்கத்துக்குத் தெரியாமல் இல்லை. இதற்காக மத்திய அரசாங்கத்தில் கமிஷன்

நியமிக்கப் போவதாகச் சொல்கிறார்கள். மாநில அரசாங்கமும் அதைப் பின் பற்றி சிக்கனம் ஏற்படுத்தி, வரிக்கு ஒரு முடிவு கட்டி—வரியில் குறைக்கவேண்டுமென்ற கூக்குரல் உள்ள காலத்தில் வரியை அதிகப்படுத்தினால் மேலும் விலைவாசி ஏறும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். முன்பே லாரிக்காரர்கள், பஸ்காரர்கள், குறைந்த வருமானக்காரர்கள் எல்லாம் தொழிலை விட்டுப் போய் விடலாமா என்று நினைக்கிறார்கள். அரசாங்க பஸ் டிரான்ஸ்போர்ட்டிலும் குறைந்த வருமானம், அதனால் நஷ்டம் என்று காண்பித்திருக்கிறார்கள்.

**திரு. எஸ். ஜெயராம் செட்டியார் :** பஸ் சார்ஜையும் தான் கூட்டி இருக்கிறார்களே . . .

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** அதுவும் மக்கள் தலையில் தான் விழுகிறது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். எதற்கும் ஒரு அளவு உண்டு. சுமை தூக்குகிறவன் சுமக்கும் அளவுக்குத் தான் சுமை வைக்க வேண்டும். அதற்கு மேல் கூடாது என்று தெரிவித்துக் கொண்டு, இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்த தலைவரவர்களுக்கு நன்றி தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

*** கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் துணைத்தலைவர் அவர்களே, முதலில் இந்த விவாதத்தை துவக்கிய கனம் உறுப்பினர் திரு. சங்கரலிங்கம் பிள்ளை அவர்கள், எல்லோருக்கும் இராணுவ சேவை பயிற்சி கொடுக்கவேண்டுமென்று சொல்லி இருக்கிறார்கள். இப்பொழுது, மாணவர்களைப்பொறுத்த வரையில் என்.ஸி.ஸி. பயிற்சியளிக்கப்பட்டு வருகிறது. அது இல்லாமல், ஹோம் கார்ட்ஸுக்கு 40,000 பேர் சேர்த்துக்கொள்ளுவதென்பது அரசாங்கத்தின் திட்டம். இப்பொழுது, 8,400 பேரை சேர்த்திருக்கிறார்கள். ஹோம் கார்ட்ஸ் இந்த வேலையை கவனிப்பதும், சீரிய முறையில் பணியாற்றுவதும் அங்கத்தினர்களுக்குத்தெரியும். தவிர இருட்டடிப்பின் பொழுது, சிறந்த பணியாற்றினார்கள். மேலும் இராணுவத்திற்கு வேண்டுமென்றால் சேர்க்கப்படுகிறார்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் சேர்த்து பயிற்சியளிக்கப்படுகிறது. கடற்கரைகளில் பாதுகாப்பளிக்க (Village Volunteer Force) அவர்கள் முன்வருகிறார்கள். ஆனால், சாதாரண மக்களுக்கு இராணுவப்பயிற்சி கொடுக்கவேண்டிய அவசியம் இல்லையென்று நான் கருதுகிறேன். அது கொடுப்பது என்றால், ஆயுதம் கொடுக்க வேண்டும். அதை ஜாக்கிரதையாக பார்க்கவேண்டி இருக்கும். இந்தப் பக்கத்தில் அது வேண்டியதில்லை. எல்லைப் புறத்தில் ஆபத்து இருக்கிறது. ஆகவே, அதிகமாக இராணுவப் பயிற்சி கொடுக்கவேண்டுமென்று சொல்லி இருக்கிறார்கள். நம் மாநிலத்தைப் பொறுத்தவரையில் அதற்கு அவசியமில்லை.

கன்னியாகுமரியில் பயிர்ப் பாதுகாப்புப் பற்றிக்குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி உணவு அமைச்சர் அவர்கள் கவனித்து வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். மின்சாரத்திற்கு வரி உயர்த்தப்படுவது பற்றிக் குறிப்பிட்டார்கள். மொத்த மின்சாரத்தில் 73 சதவிகிதம் விவசாயத்திற்கு கொடுக்கப்படு

கிறது. அது subsidised rate அந்த ரேட் ஒரு யூனிட்டிற்கு 9 பைசாவிற்கு மேல்போகக்கூடா தென்று சில ஆண்டுகளுக்கு முன்பே மத்திய அரசாங்கம் தெரிவித்திருந்தது. இந்த மாநிலத்தைப் பொறுத்தவரையில் அதிகப்படியானுல் 9 அல்லது 9¼-க்குத்தான் போகும். அப்படி இருந்தாலும் subsidise பண்ணப்பட்ட ரேட்டாகவிருக்கும். ஆகையினுல், இது அதிகமாக இருக்கிறது என்று சொல்வதற்கு இல்லை. மின்சார ரேட்டு அதிகம் என்று செல்வதற்கில்லை. நில வரியை மொத்தத்தில் கால் பங்கு அதிகப்படுத்துவதைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். நிலம் அரை ஏக்கராவது வைத்துக்கொண்டிருப்பவர்களையும் நிலம் இல்லாதவர் களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அது கூட இல்லாதவர்கள் தான் அதிகமாக இருக்கிருர்கள். இதைப்பற்றி முன்பே தெரிவிக்கப்பட்டிருக்கிறது. நில வரியை அதிகமாகப் போடுவது, கிராம மக்களுக்குச் செய்யும் வசதிகளை அதிகமாகப் பெருக்குவதற் காகத்தான் பயன்படுத்தப்படும். குடிதண்ணீர் வசதிகள், ஏழை மாணவர்களுக்கு இலவசமாக உணவு அளித்தல், ஆரம்பப்பள்ளி மாணவர்களுக்கு புத்தகம் வழங்குவது போன்றவைகளுக்காகத் தான் பயன் படுத்தப்படுகிறது. நிலம் உள்ளவர்கள் எல்லோரும் ஏழைகளாக இருக்கமாட்டார்கள். நிலம் இல்லாதவர்கள்தான் ஏழைகள். அவர்களுக்குப் பயன்படவேண்டுமென்ருல் வசதி யுள்ளவர்கள் ஓரளவு தியாகத்தைச் செய்யத்தான் வேண்டும். சோஷலிசம் என்று நாம் பேசுகிருேம். யாரும் அதை ஆட்சேபிக்க வில்லை. வரவுசெலவு திட்டத்தில் மொத்தத்தில் 170 கோடி ரூபாய் வருகிறது என்ருல், மொத்த நில வரி சர்சார்ஜ் எல்லாம் சேர்த்துப் பார்த்தால் 12 கோடிதான் வருகிறது. மற்றவைகளுக்கு ஏற்றிருப்பதுபோல நில வரி ஏறியிருக்கவில்லை. விவசாயிகளுக்கு நஷ்டம் வரும் வகையில் அரசாங்கம் எதையும் செய்யாது. நில வரி முன்பு நிர்ணயிக்கப்பட்டது. இப்போதுள்ள ரூபாயின் மதிப்புக்குத் தகுந்தபடிதான் இப்போது விதிக்கப்படுகிறது. உணவு தானியங்களின் விலை அதிகமாகத்தான் இருக்கிறது. அதைப்பார்க்கும்போது இப்போது உள்ள நெருக்கடி நேரத்தில் அவர்கள் கொடுக்கிற வரியை மொத்தத்தில் கால்பங்கு அதிகப்படுத்தியிருப்பதை ஆட்சேபிப்பதற்கில்லை. அவர்களும் இப்போதுள்ள நிலையில் ஓரளவு இந்தப் பங்கை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமென்று நான் கோருகிறேன். ஒரு கோடி அறுபது லட்சம் தானே, இதற்காக நில வரி ஏன் போடுகிறீர்கள், அது எதற்கு என்று கேட்கிருர்கள். அதையே தான் நானும் சொல்கிறேன். எல்லோரும் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்ற வகையில்தான் இந்த நில வரி சர்சார்ஜ் போடப் பட்டிருக்கிறது. திரு. ஹாண்டே அவர்கள் சொன்ஞர்கள், சப்ளி மெண்டரி டிமாண்டில் கொடுத்ததெல்லாம் பாகிஸ்தான் ஆக்கிரமிப்பை முறியடிப்பதற்குக் கொடுத்ததாக. அப்படியில்லை. ஆண்டு தோறும் தான் டிமாண்ட் வருகிறது. நெருக்கடி நேரத் தில் மட்டுமல்ல, ஆண்டுதோறும் ஒருமுறை இருமுறை மட்டுமல்ல மூன்றுமுறைகூட வருகிறது. நெருக்கடி நிலையை ஒட்டி நாம் விவ சாய அபிவிருத்தித் திட்டங்களையெல்லாம் வேகப்படுத்தவேண்டி யிருக்கிறது. பத்தாயிரம் கிணறுகள் போட முடியுமா என்று கேட்

9th November 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

டார்கள். கலெக்டர்கள் மேலும் 20,000 கிணறுகள் போடலாம் என்று சொல்கிறார்கள். அதற்காக மத்திய அரசாங்கத்திலிருந்தும் நிதி கேட்டிருக்கிறேன். சீக்கிரத்தில் நெல் உற்பத்தியைப் பெருக்கு வது எப்படி என்பதைத்தான் நாம் பார்க்கவேண்டும். நாம் போடுகிற வரியினால் பணவீக்கம் வரும், விலைவாசி ஏறும் என்று சொல்வதற்கில்லை. உடனடியாகப் பலன் அளிக்கும் வகையில்தான் நாம் கவனம் செலுத்துகிறோம். கட்டிடங்கள் கட்டுவதையெல் லாம் நிறுத்திவிட்டோம். ஸ்டேசுடரி ரேஷன் பற்றி சொன்னார்கள். கண்ட்ரோலே வேண்டாம் என்று சொல்லப்படுகிறது. கண்ட்ரோல் வேண்டாமென்று போன ஆண்டு பார்த்தோம். எவ்வாறு மக்கள் வரிசையில் நின்றார்கள், இரவு பத்து பனிரெண்டு மணிக்கே போய் படுத்திருந்து காலையில் அரிசி கிடைக்குமா என்று எப்படி ஏங்கிக்கொண்டிருந்தார்கள் என்பதையெல்லாம் சென்னை 4-30
நகரிலும் மற்ற இடங்களிலும் பார்த்தோம். அந்த நிலைமை மீண்டும் வராமல் அரிசியைப் பகிர்ந்து கொடுக்கவேண்டுமென்று தான் அரசாங்கம் இதை ஏற்றுக்கொண்டது. வேறு வேலை இல்லாமல் இதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. அரசாங்கம் வியாபாரம் செய்யவேண்டுமென்ற நோக்கத்தில் அல்ல. ஸ்டேசு டரி ரேஷனிங் என்றால் அதற்கும் செலவை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். எந்த அளவுக்கு விலை வைப்பது, எந்த அளவுக்கு மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்வது என்றுதான் பார்க்க வேண்டும். பருவ மழை தவறிப்போனாலும் சமாளித்து தண்ணீரை அப்படியே பயன்படுத்தி பயிர்களை ஏறக் குறைய காப்பாற்றியிருக்கிறோம். குறுவை, சம்பா எல்லாம் காப்பாற்றப்பட்டன. அது மட்டுமல்ல. அதை எல்லோருக்கும் பகிர்ந்துகொடுக்கிறோம். ஸ்டேசுடரி ரேஷனிங் ஏன் என்றால் வாங்குகின்ற சக்தி சில நகரங்களில்தான் அதிகமாக இருக்கிறது. அப்படிப்பட்ட நகரங்களில் அதிகமாக வாங்கிக் கொண்டால் கிராம மக்கள் அங்கு ஒன்றுமே கிடைக்கவில்லை என்று கஷ்டப்படும் நிலை வருகிறது. அதை முதலில் தடை செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் ஸ்டேசுடரி ரேஷனிங் வருகிறது. தவிர்க்கக்கூடாத நிலையில்தான் சென்னையிலும் கோவையிலும் வைத்திருக்கிறோம். ஹாண்டே மற்றொன்று குறிப் பிட்டார்கள். இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷனுக்கு ஏன் பணம் கொடுக்கவேண்டுமென்றார்கள். முதலில் அட்வான்சாக, வேஸ் அண்ட் மீன்ஸ் ways and means வகையில் கொடுக்கப் பட்டது. கார்ப்பரேஷன் அமைக்க முதலில் பணம் அட்வான்சு செய்கிறோம். விவசாயிகளுக்கும் அப்படிக் கொடுக்கிறோம். பம்ப் செட் வைக்க, விவசாய சாமான் வாங்குவதற்காக கொடுக் கிறோம். ஸ்தலஸ்தாபனத்திற்கு அவசியமான வகையில்தான் கொடுக்கிறோம். வீரர்களுக்கு லட்சம் ரூபாய்தானே கொடுக் கிறோம் என்று சொன்னார்கள். அவர்கள் எண்ணத்தைப் பாராட்டு கிறேன். தாராளமாகத்தான் கொடுக்கவேண்டும். அரசாங்கமே கொடுக்கவேண்டுமென்பதில்லை. இப்போது வருவதெல்லாம் வேஸ் அண்ட் மீன்ஸ் என்ற வகையில், ஜனங்கள் கொடுக்கிறார்கள். இதை புகழ்ச்சிக்காக சொல்லவில்லை. மற்ற மாநிலங்களில் இருப்பது தெரியும். வீரர்கள் குடும்பங்களைக் கவனிப்பதில் தமிழ்

[திரு. எம். பக்தவத்சலம்] [9th November 1965

நாடுதான் இன்று முன்னணியில் நிற்கிறது. அதெல்லாம் ஹாண்டே அவர்களுக்குத் தெரியவில்லை. இதில் போட்டிருப்பதைத்தான் பார்த்துவிட்டுக் கேட்கிருர். வெளியே அற்புதமான உற்சாகம் இருக்கிறது. தீபாவளிக்கு முன்பு கடைகளில் மிளகாய், அரிசி, புளி எல்லாம் வைத்துக் கொடுத்தார்கள். நான் கலெக்டர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். வீரர்கள் குடும்பத்திற்கு எவ்வளவு வேண்டுமானுலும் செலவு செய்யுங்கள். நாங்கள் கொடுக்கிறோம் என்று சொன்னேன். ஜனங்கள் லட்சக் கணக்கில் பணத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கிருர்கள். ஜனங்கள் கொடுத்த பணம் ஒவ்வொரு ஜில்லாவிலும் இருக்கிறது. இருந்தாலும் அதற்கு மேலும் வேண்டுமானுலும் செலவு செய்யுங்கள், அரசாங்கம் கொடுக்கும் என்று சொன்னேன். வீட்டில் ஒருவர் இறந்துவிட்டால், ஏதாவது உதவி வேண்டினுல் தாராளமாகக் கொடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன்.

கார்கள் இறக்குமதி பற்றிச் சொன்னுர்கள். வெளி நாட்டிலிருந்து எந்தப் பெரிய காரும் இறக்குமதி செய்வதில்லை. செகண்ட் ஹாண்ட் கார்தான் வாங்கப்படுகிறது. நமக்கும் சிக்கனம் வேண்டும். நாம் சின்னக் காரைத்தான் விரும்புகிறோம். செகண்ட் ஹாண்ட்டில் கிடைத்தால் வாங்குகிறோம். அதை ஹாண்டே தவருகப் புரிந்து கொண்டார்.

**டாக்டர் எச். வி. ஹாண்டே:** ஸ்டேட் கார்ப்பரேஷனில் வாங்கியது என்ன?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அதில் ஏன் வாங்கக்கூடாது? சிக்கனமாக வாங்கவேண்டுமென்று சொல்கிறோம். ஹாண்டே இதை சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் கார் இந்த நாட்டில் இருப்பதுதான். ஏலத்தில் அவர்கள் விற்ருல், நியாயமான விலையில் விற்ருல், முதலில் அரசாங்கத்திற்கு அவர்கள் கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. அதற்குப் பிறகுதான் வெளியே வேண்டுமானுல் விற்கிருர்கள். அதற்காக நாம் அன்னிய நாட்டு செலாவணியைக்கொடுத்து கார் வாங்குகிறோம் என்று நினைப்பது தவறு என்பதைச் சொல்லிக் கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ வஹாப் நாட்டுப் பற்று, பாகிஸ்தான் கண்டனம் ஆகியவை பற்றியெல்லாம் பேசினுர். ஆனுல், மொத்தத்தில், நாங்கள் 4 முஸ்லீம்களை பாதுகாப்புக் கைதிகளாக 'டிடெய்ன்' பண்ணி வைத்திருப்பதுபற்றி அவர் சொன்னது தப்பு என்று சொல்ல விரும்புகிறேன். "நான் முஸ்லீம் லீகைச் சேர்ந்தவன், அவரும் முஸ்லீம் லீகைச் சேர்ந்தவர்; அதனுல் அவரை விட்டுவிட வேண்டும், தூக்குப் போட்டுக்கொள்ளத் தயாராயிருக்கிறேன்" என்றெல்லாம் சட்ட மன்றத்தில் பேசினுல் என்ன, எங்கே பேசினுல் என்ன? அதனுல் என்ன பிரயோஜனம்? பத்து, முப்பது பேர்களை வைத்துக்கொண்டு தவருகப் பேசுகிருர்கள். இதைப் பற்றியெல்லாம் நாங்கள் டில்லியில் 'டிஸ்கஸ்' பண்ணினேம். நாங்கள் 'டிடெய்ன்' பண்ணிய முஸ்லீம்கள் 4 பேர் தான். தவருகப் பேசுபவர்கள் எல்லோர் மீதும்

9th November 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

நடவடிக்கை எடுக்கப்படுவதில்லை. திருச்சிராப்பள்ளியில் 'பார் அஸோஸியேஷனில் தவறாகப் பேசினார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் எல்லோர் பேரிலும் நடவடிக்கை எடுக்கப்படுவதில்லை. பத்து முப்பது பேர்களை வைத்துக்கொண்டு தவறாகப் பேசுகிறார்கள். இருபது, முப்பது பேர்களை வைத்துக்கொண்டு "நீ பாகிஸ்தான் ரேடியோவைத் தான் கேட்க வேண்டும். அதில் தான் உண்மை வரும். அகில இந்திய ரேடியோவில் பொய் வரும்" என்றெல்லாம் சொல்வதும், ஒரு கூட்டத்தில் "பாகிஸ்தான் ஜிந்தாபாத்" என்று கத்துவதும் சரியல்ல. போலீஸை நம்பாதீர்கள் என்று சொல்கிறார்கள். இந்த 'டிடென்ஷன்' விஷயத்தில் ஸ்ரீ வஹாப் கூறுவதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. எங்களுக்குப் பொறுப்பு இருக்கிறது. நாங்கள் 4 பேர்களைத்தான் 'டிடெய்ன்' பண்ணியிருக்கிறோம். அதை இங்கே பெரிதாகப் பேசுவது சரியல்ல என்று சொல்லி என் வார்த்தையை முடிக்கிறேன்.

(Deputy Chairman in the Chair.)

## (2) DISCUSSION ON THE STATEMENT OF DEMANDS FOR GRANTS FOR EXCESS EXPENDITURE IN 1962–63.

DEPUTY CHAIRMAN : Does anybody want to speak?

(No hon. Member rose . . .)

DEPUTY CHAIRMAN : Then we shall proceed to the next item on the agenda.

## V.—GOVERNMENT BILL.

### THE MADURAI UNIVERSITY BILL, 1965 (L.A. BILL No. 11 OF 1965.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Deptuy Chairman, Sir, I move—

"That the Madurai University Bill[a], 1965 (L.A. Bill No. 11 of 1965), as passed by the Assembly, be taken into consideration".

As hon. Members are aware, this Bill was introduced in the Assembly on the 27th July 1965. With the concurrence of this House, the Bill was referred to a Joint Select Committee. The Joint Select Committee considered the Bill in detail and submitted its report on the 25th October 1965, together with a copy of the Bill as revised by it.

I shall briefly explain the important changes which the Joint Select Committee has made in the Bill.

The Committee has revised the definition of the term "affiliated college" so as to refer to any college within the University area affiliated to the University and providing courses of study for admission to the examinations for degrees of the University. The Committee has also changed the definition of the term "approved college" so as to refer to any college within

[a] Printed as Appendix VI on pages 120–150